## (1)அண்ணலார் நூர் என்பதை குறித்து வாதங்களும் நமது பதில்களும்

அப்துர் ரஷீத் ரிஜவி கூறுகிறார்: பெருமானார் (ஸல்) அவர்களை மனிதர் என்பதாக அல்லாஹ் கூறியுள்ளான்.அல்லது அண்ணலாரே தன்னை மனிதர் என்பதாக கூறியுள்ளார்கள்.அல்லது காபிர்கள் கூறியுள்ளார்கள் எனவே நபியை எவர் மனிதர் என்கிறாரோ அவர் அல்லாஹ்வாக நபியாக இருக்கமுடியாது.எனவே காபிர்களில் நுழைவார்.

(ஆதாரம்:ருஷ்துல் ஈமான் பக்கம் 45)

மௌலவி நயீமுத்தீன் முராதாபாதி கூறியுள்ளார் குர்ஆனில் நபிமார்களை மனிதர் என்பவர்களை காபிர் என்பதாக கூறப்பட்டுள்ளது.

காஜாயினுல் இர்ஃபான் முஃப்தி அஹ்மத் யார் கான் நயீமியும் அப்துர் ரஷீத் ரிஜவியைப் போன்று எழுதியுள்ளார்

(நூருல் இர்ஃபான் 636,448)

மற்றோர் இடத்தில் கூறுகிறார்:

நபி ஸல் அவர்களை மனிதராக ஏற்பது ஈமான் இல்லை.(தப்ஸீர் நயீமி 1/100)

ஆக பரேல்விகளின் கொள்கையின்படி அண்ணலார் மனிதரல்ல மாறாக நூர் என்பதுதான்.

(2)நபி ( ஸல்) அவர்கள் நூராக இருந்து மனித போர்வையில் வருகிறார்கள்

பதில்:மனித போர்வையில் நபி ( ஸல்) அவர்களை ஏற்பது அண்ணலார் மனிதர் என்பதை மறுப்பதாகும்.மனிதப் போர்வையில் வருபவர் மனிதராக இல்லாமல் இருக்கவேண்டும்.மனிதராக இல்லாதவர் தான் மனிதப் போர்வையை அணியமுடியும்.

ஜிப்ரயீல் ( அலை) அவர்கள் மனிதராக இல்லை என்பதினால்தான் மனிதப் போர்வையில் வரும் தேவை ஏற்பட்டது? மனிதராக இருந்தால் மனிதப் போர்வையில் ஏன் வரவேண்டும்? அதனின் தேவையும் கிடையாது.எனவே நபி (ஸல்) அவர்களை மனிதப் போர்வையில் ஏற்பது அண்ணலார் மனிதர் என்பதை மறுப்பதாகும்.

பரேல்வி அல்லாமா ஸயீதி கூறுகிறார் சிலர் நபி ஸல் அவர்கள் மனிதர் இல்லை.அவர்கள் உண்மையில் நூராக இருக்கிறார்கள்.மனிதர் என்பது அவரின் தன்மை அல்லது ஆடையாக உள்ளது என்கிறார்கள் (திப்யானுல் குர்ஆன் 2/453)

அண்ணலார் நூராக இருந்து கொண்டு மனிதப் போர்வையில் வந்தார் என்பதும் மனிதர் என்பதை மறுப்பதாகும்.

(3)பரேல்விகளின் சிலர் அண்ணலாரை மனிதர் என்பதாக ஏற்றுக்கொள்ளுதல்:

பரேல்விகளின் அறிஞர்கள் கூறுகிறார்கள்: நபிமார்கள் மற்றும் தூதர்கள் மனிதர் என்பதை சிலர் மறுக்கின்றார்கள்.அவர்கள் இஸ்லாத்தை விட்டு வெளியேறியவர்கள் (அன்வாரே கன்ஜூல் ஈமான் 851, அன்வாரே ரிஜா)

அஷ்ரப் ஜலாலி கூறுகிறார்:

மனிதர் என்பது நம்மிடத்தில் உறுதியான கொள்கை அதனை மறுப்பது இறைநிராகரிப்பாகும்.(நூரானிய்யத் முஸ்தஃபா ஸே இன்கார் கியூ பக்கம் 9)

பரேல்வி முஃப்தி ஸதீக் கஜார்வி நபிமார்கள் மனிதர்கள் அவர்கள் மனிதர் என்பதை மறுப்பது குஃப்ராகும்.(அகாயித் வ இபாதத் 12)

(4)நாமும் நபி ஸல் அவர்களை மனிதர் என்பதை ஏற்கிறோம் என பரேல்விகள் வாதிட்டால்

நமது பதில்:மனிதர் என்பதாக ஏற்பது ஈமான் இல்லை ( தப்ஸீர் நயீமி 1/100)

பரிசுத்தமான அண்ணலாரின் உள்ளமையானது மனிதர்களின் தந்தைக்கு முன்பே இருந்துள்ளது.பரிசுத்தமான, தூய்மையான நபரை மனிதர் என்பதாக சொல்வது அல்லது ஏற்பது எப்படி சரியாகும்? (அன்வாரே கமரிய்யா 94)

இதனை தான் மௌலவி அப்துல் மஜீத் கான் ஸயீத் 'முஸ்லிஹான காவிஷில்' 151ம் பக்கத்தில் எழுதியுள்ளார்கள் நீங்கள் மனிதராக ஏற்றால் அவ்விஷயமானது அங்குதான் நிற்கும்.

(5)நபியை மனிதர் என்பதாக கூறலாமா? என்று பரேல்விகளிடம் கேட்டால் அதற்கு அவர்கள் கூறுகிறார்கள்: (அதனின் கருத்து)

சில விஷயங்களை நாம் நம்பிக்கை கொள்வோம்.எனினும் அதனை நாவால் சொல்ல மாட்டோம்.உதாரணமாக அல்லாஹுதஆலா உலகத்தின் அனைத்துப் பொருட்களின் படைப்பாளன். உதாரணமாக பன்றி,நாய் பன்றியின் படைப்பாளன் அல்லாஹ், நாயின் படைப்பாளன் அல்லாஹ் என கூறமாட்டோம்.

(இப்லீஸ் தா தேவ்பந்த்)

அஷ்ரப் ஜலாலி ஸாஹிப் கூறுகிறார் சில வார்த்தைகள் உள்ளது.எனினும் அதனை பேசமாட்டோம்.பன்றியின் படைப்பாளன் அல்லாஹ் என்பது அனைவரின் கொள்கை இல்லையா? (மஃப்ஹூம் குர்ஆன் பதல்னே கி வாரிதாத் 187)

இந்த விஷயத்தை கூறி அண்ணலாரை மனிதர் என்பதாக கூறக்கூடாது என வாதிட்டால்

நமது பதில்:இந்தளவிற்கு அருவருப்பான விஷயத்தை அண்ணலாருக்கு ஒப்புமையாக கூறுவது கூடுமா? இதனைக் குறித்து பரேல்விகள் கூறுவதை பார்ப்போம்!

அருவருப்பானவைகளைக் கொண்டு ஒன்றை ஒப்புமையாக கூறினால் அதன் மூலம் இழிவுப்படுத்துதலும் களங்கப்படுத்துதலும் பெறப்படும். (அஸ்ஸவாரிமுல் ஹிந்திய்யா)

முஃப்தி யார் கான் நயீமி கூறுகிறார்: நபி ( ஸல்) அவர்களின் விஷயத்தில் லேசான வார்த்தையை உபயோகிப்பதும் உதாரணங்கள் தருவதும் இறைநிராகரிப்பாகும்.(நூருல் இர்பான்)

முஃப்தி ஹனீஃப் குரைஷி கூறுகிறார் விலங்குகளுடன் ஒன்றை ஒப்பிட்டு கூறுவதானது அதனை இழிவுப்படுத்துவதாகும். ( முனாளிரே குஸ்தாக் கோன்)

(6)நபி ஸல் அவர்களின் படைப்பின் மூலம் என்ன? பரேல்விகளின் கூற்று படைப்பின் மூலமானது மண்தான் என்றால்

நமது பதில்:எவரின் படைப்பின் மூலமானது மண்ணாக இருக்குமோ அவர் நூராக இருக்க மாட்டார்.மனிதப் போர்வையில் இருக்க மாட்டார். மாறாக மனிதராகதான் இருப்பார்.

அண்ணலாரின் படைப்பின் மூலம் மண் இல்லை என்றால் தெளிவாக ரிளாகான் பரேல்விக்கு எதிரான கருத்தாகும். இதன் காரணம் என்னவெனில் நான் மற்றும் அபூபக்கர்,உமர் ஒரே மண்ணிலிருந்து படைக்கப்பட்டோம்.அதில்தான்
அடக்கப்படுவோம்.(பதாவா அஃப்ரிகி)

அண்ணலாரின் மூலம் மண் என்பதை ரிளாகான் பரேல்வி ஏற்கிறார்.இதற்கு எதிராக கொள்கை கொண்டவர் இறைநிராகரிப்பாளர். ஏனெனில் அஹ்மத் ரிளாகானின் கொள்கைக்கு ஏற்ப இல்லாதவர் காபிராகுவார்.(அன்வாரே ஷரீஅத்,அஸ்ஸவாரிமுல் ஹிந்திய்யா)

(7)பரலேவிகள் அண்ணலார் (ஸல்) அவர்கள் மனிதப் போர்வையில் வந்துள்ளார்கள் என வாதிடுகின்றனர். நமது பதில்:மனிதப் போர்வையை பற்றி முதன் முதலில் மக்கத்து முஷ்ரிகீன்கள்தான் கூறினார்கள்.

பரலேவிகளின் சிறந்த மார்க்க அறிஞர் கூறுகிறார்:காபிர்கள் கூறினார்கள் மக்களே முஹம்மத் மனிதர் இல்லை.மனிதனின்

உருவத்திலே இறைவன்தான் நமக்கு முன்னால் வந்துவிட்டார்.அது மட்டுமின்றி முஹம்மது அசலில் அல்லாஹ்தான்.நம்மிடத்தில் மனித உடலில் வந்துள்ளார்.மனித தோற்றத்தில் காட்சியளித்தவாறு மனித போர்வையை தேர்ந்தெடுத்து நமது பூமியில் வருகை தந்துள்ளார்கள். ( தஹப்புள் அகாயிதே அஹ்லுஸ்ஸுன்னா)

மனித போர்வையில் என்கிற கொள்கையை முதன் முதலில் ஏற்றவர்கள் மக்கத்து முஷ்ரீகின்கள் என்பதும் அல்லாஹ், நபி ( ஸல்) அவர்களின் உருவத்தில் மனிதப் போர்வையில் வந்துள்ளான் என்கிற இறைநிராகரிப்பு கொள்கையை கொண்டிருந்தார்கள் என்பதையும் அறியமுடிகிறது.

இதனைதான் பரேல்வி பெரியோர்களும் கூறுகிறார்கள்

தீவானே முஹம்மதி, மவாயிஜ் நயீமிய்யா போன்ற நூல்களில் இது போன்ற கொள்கை உள்ளது.

அதனின் சுருக்கமான கருத்து:

கியாமத் நாளில் அண்ணலார் பெருமானார் ஸல் அவர்கள் அல்லாஹ் ஆகி வெளியாகுவார்கள். மனிதன் செல்லும் போது மனிதப் போர்வையை அணிகிறான்.முஜம்மிலாக வந்திருந்தார்.அல்லாஹ்வாக ஆகி வெளியாகுவார்.